சேர்ந்து அவள் திருவடியை வணங்குதலும், அவளும் ந்திரனாகிய மானதனை வாரியெடுத்து மார்போடணை து, நீயிங்குவந்த காரியமென்னவென்று கேட்க, மான லும்நடந்த செய்தியெல்லாம் ஆதியந்தமாய்ச்சொல்லி ந்த மாயையினிடத்திலே யமைந்திருந்தான். அப் போது மாயையானவள் தன்னாலேவப்பட்ட மோஞ்ச ன் முதலானோருடைய சொற்கள் தாழ்ந்ததையும், வேதாந்தி வெற்றியடைந்ததையும், அவன் தங்கையா கிய உபநிடதையை விவேகன் சேர்ந்து பிரபோதனைப் பெற்றதையும், அவன் பிறந்தவுடனே அஞ்ஞன் உயிர் நீங்கினதையும், மானதன் தன்னிடத்தில்வந்து சேர்ந்த தையும், ஒளியை யிருளாக்கிப் பொய்யை மெய்யாக்கி யாவரையும் மயக்க வல்லளாகிய தனது இந்திரசால முழுதும் அழிந்து இவ்வாறு முடிந்ததையும் மனத்திற் கொண்டு மிகவும் வருந்தி, சலநமற்ற என் தலைவனிடத் தில் என் சலநத்தை யாரோபித்தும் கெடுதியின்றி யெவ்விடத்தும் வாழ்வோனைச் சரீரமாகிய சிறு குடி லிற் சிறைசெய்து என்மூத்த மகனாகிய மோகனைக் கொண்டும் அவன் மக்களாகிய அஞ்ஞன் முதலானோ ரைக்கொண்டும் தளையிட்டும் இன்னும் பலதீமைகள் செய்தும் பலிக்காமல் இவ்வாறு முடிந்ததே ஆதலால் நான் செய்தபிழையும் என் மகன் செய்த பிழையும் அவன் புதல்வர் செய்தபிழையும் ஆகிய எல்லாவற்றை யும் யோசிக்கு மிடத்தில் தீமைகளே யென்பதற்கு யாதொரு சந்தேகமுமில்லை; இந்தப் பிழைகளையெல் லாம் மன்னித்து நம்மைக் காப்பவர் நமது நாயகனே யன்றி வேறொருவருமிலர், அவன் திருவடியை யடை வதே தகுதியான காரியமென்று துணிந்து அவனை யடைந்து அவன் பதத்திற் சேர்ந்தாள். விழித்தபோது கனவுபோலவும் பூமாலையிற் றோன்றிய பாம்புபோல வும் கிளிஞ்சில் வெள்ளிபோலவும் பஞ்சபூத விகாரங் கள்யாவும் ஓட, மாயையும்நீங்கினபிறகு, மிக்க ஒளியை

யுடைய பிரபோதன் காட்சி காணப்படுபொருள் காண்பவன் என்னும் விகற்பமுண்டாக மோகனுதியர் முன் செய்த பிழைகளெல்லாம் பிழைபாயொழியவும் தன் தந்தை நினைத்தபடியே நிறைவேற்றவும் அழிவற்ற அகண்டபரிபூரண சிந்மயத்தைத் தழுவிப் பிரகாசித்தான். மானதன் லயிக்கவும் மாயையின் ஆரோபிதங்கள் மறையவும் முடிவில்லாத சிந்மய மூர்த்தியானவன் உபாதியாகியதடை நீங்கப்பெற்றுப் பேரிருளை யழித்து உதயஞ்செய்து விளங்குகின்ற சூரியன்போலப் பேரொளியைப்பரப்பி எவ்விடத்தும் நிறைந்து ஒன்றுகி நின்றான். பிரபோதன் இவ்வாறு அரசுசெய்யுங் காலத்தில், இவ்வுலகில் அந்தணர் முதலானோர் பெருஞ் செல்வத்தோடு கூடியிருந்தும் புளியம்பழமும் அதன் தோடும் போல மனத்திலொரு பற்றுமில்லாமல் நித்தியாநந்த நிலையில் நின்றார்கள். பெரும் பரப்பையுடைய இவ்வுலகத்தில் மெய்ஞ்ஞான விளக்கமென்னும் இந்தக் கதையை ஒருதரம்படிப்போரும் அறிவுண்டாகக்கேட்போரும் இம்மையில் பெரும்போகங்கள் அநுபவித்து மறுமையில் அகண்ட பரிபூரண சச்சிதாநந்த சாகரத்தில் மூழ்குவார்கள்.

இது பந்தம், இது மோக்ஷம், இது சரீரத்திலுள்ள சீவன், இதுபரம், இந்தச் சீவபரங்கள் ஒன்றுதற்குரிய முறைமையிது, என்று பிறப்பிறப்புக்க ளொழியும்படி அங்கை நெல்லிக்கனிபோலக் காட்டின ராகவாநந்தனென்னும் கருணாநிதியின் திருவடி வாழ்க.

தம்மையடுத்த தொண்டரது பெரும் பவமும் அலகையின் முலைப்பாலோ டுயிரும் கவர்ந்து, என் வினையும் பெருஞ்சகடும் மருதும் சாய்த்து, கோவியர்களுடுத்தகலையும் சிறியேனுரைத்த கலையும் கொண்டு எனக்குப் பேரின்பத்தை யருள்செய்த ராஜகோபாலரது திருவடித் தாமரைமலர்கள் வாழ்க.

தமிழ்ப் புலவர்க்கும், வடநூற் புலவர்க்கும் பொருள் விரித்துரைத்து, சீதா நாயகனாகிய ஸ்ரீராமபிரான் போல நீதிச்செங்கோல் செலுத்தித் திசையிலுள்ளவரெல்லாரையுங் காப்பாற்றி, வேதப்பனுவலாகிய மெய்ஞ்ஞான விளக்கத்தால் உலகத்தை விளங்கச் செய்கிறஎமது மாதைத் திருவேங்கடநாத மறையோன் வாழ்க வாழ்க.

பிரபோதன் முடிசூடு சருக்கம் முற்றிற்று.

---

## பிரபோத சந்திரோதய வசநம்

முற்றிற்று.

